[20th March 1961

SRI K. SATTANATHA KARAYALAR : தொழிலாளர்களுக்கு வீடு கட்டும் இந்தத் திட்டத்தின் கீழ் உத்தேசமாக இது வரையில் செலவழித்த தொகை எவ்வளவு என்று சொல்ல முடியுமா ? "கவர்மெண்டு ப்ராஜக்ட்ஸ்", "கூட்டுறவு ப்ராஜக்ட்ஸ்", "ப்ரைவேட் எம்ப்லாயர்ஸ்" என்ற தலைப்பின் கீழ் "amount to be spent" தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதுவரையில் எத்தனை சதமானம் செலவாகியிருக்கும் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் "amount to be spent" பற்றிக் கேட்டார். ஆகையினால் அது கொடுக்கப்பட்டிருக்கிறது. எவ்வளவு செலவழிந்தது என்று கேட்டால் அதைக் கொடுக்க முடியும். இன்னும் ஓரிரண்டு நாட்களில் "எண்டையர் ஹவுசிங்" பற்றிய ஒரு ஸ்டேட்மெண்டு புத்தகம் தயாரித்து மேஜையின் மீது வைக்கிறேன். அதைக் கனம் அங்கத்தினர் பார்த்துக்கொள்ளலாம்.

*Sethu Samudram Project*

* 932 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சேது சமுத்திரத்திட்டத்தை ஆராய்ந்து பிரிட்டிஷ் நிபுணர் காப்டன் டேவிஸ் தன் ஆராயச்சியின் முடிவை அரசாங்கத்திற்கு அறிவித்து விட்டாரா ?

(இ) அப்படியானால் அதன் சாராம்சத்தை சட்டசபை நூல் நிலையத்தில் வைக்கப்படுமா ?

(உ) அவர் முடிவின் பேரில் அரசாங்கம் என்ன நடிவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) A copy of the entire report of Captain Devies is placed in the Legislative Assembly Library.

(*c*) Detailed investigations are now in progress. The Hydrographic Department of the Inland Navy have placed the I.N.S. 'Jumna' for the survey and preparation of large scale chart of the Sethu Samudram route. All formalities have been completed with regard to boring operations which will be started shortly.

SRI A. VEDARATHNAM : இந்த சேது சமுத்திரத் திட்டத்தை ஆராய்ந்த பிரிட்டிஷ் நிபுணர் காப்டன் டேவிஸ் தனிப்பட்ட முறையில் ஆராய்ச்சி நடத்தினாரா ? அல்லது ஏதாவது குழுவின் தலைவராக இருந்து ஆராய்ச்சி நடத்தினாரா ? அவர்களுக்கு இந்த ஆராய்ச்சி நடத்துவதற்குள்ள தகுதி என்ன என்பதைத் தயவு செய்து அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கனவே மதிப்பிற்குரிய திரு. ராமசுவாமி முதலியார் கமிட்டியில் அவர்களும் அப்பொழுது ஒரு அங்கத்தினராக இருந்து பணியாற்றியிருக்கிறார். இப்பொழுது நம் அரசாங்கத்தினுடைய அழைப்பை ஏற்று, அவர்கள் வந்து நமது ஸ்டேட் போர்ட் ஆபீசரை வைத்துக் கொண்டுதான் இந்த ஏற்பாடுகளையெல்லாம் செய்திருக்கிறார் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI A. VEDARATHNAM : அது சாத்தியம் என்று கூறுகிறார்களா ? அவர்களுடைய அபிப்பிராயம் என்ன என்பதைத் தெரிவிக்க முடியுமா ? இதற்கு ஏதாவது திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறதா ? அப்படியானால் அந்தத் திட்டத்தின் மொத்த தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : அவர்கள் பரிசீலனை செய்ததிலே

South Approach (outer section),
South Approach (inner section),
North Approach,
Bay of Bengal Approach (middle channel Palk Strait),

20th March 1961]

ஆகிய நான்கு இடங்களிலும் "போரிங்" செய்து பார்க்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். எற்கனவே மதிப்பிற்குரிய திரு. ராமசுவாமி முதலியார் அவர்கள் அப்பொழுது ரிபோர்ட்டு தயாரிக்கும்பொழுது ரூ. 9.98 கோடி செலவாகும் என்று சொன்னார்கள். பிற்பாடு அரசாங்கம் பரிசீலனைசெய்து, கமிட்டி முதலியவைகளும் பரிசீலனை செய்து பார்த்ததில் ரூ. 26 கோடி ஆரம்பத்தில் செலவாகும், ரூ. 30 கோடி வரையிலும் போகும் என்று சொல்லுகிறார்கள். இம்மாதிரி "போரிங்" போட்டுப் பார்த்து எவ்வளவுக்கு எவ்வளவு செலவைக் குறைக்க முடியும் என்பதைத் தெரிந்துகொள்ள இவர்களைக் கூப்பிட்டுப் பார்க்க ஏற்பாடு செய்திருக்கிறோம்.

SRI S. M. ANNAMALAI : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தூத்துக்குடி துறைமுகம் மட்டும் தான் எடுத்துக் கொள்ளப்படும், சேது சமுத்திர திட்டம் எடுத்துக்கொள்ளப்படாது என்பது உண்மையா? அப்படியானால், மூன்றாவது திட்டத்தில் சேது சமுத்திர திட்டத்தையும் சேர்த்து அமைப்பதற்கு இந்த சர்க்கார் என்ன முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் எற்கனவே தூத்துக்குடி துறைமுகத் திட்டம் எடுத்துக் கொள்ளப்படாது என்று சொன்னார்கள். இப்பொழுது இரண்டு திட்டங்களையும் சேர்த்து இணைத்து எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறார்கள். முதலில் தூத்துக்குடி திட்டம், பிற்பாடு சேது சமுத்திரத் திட்டம் எடுக்க வேண்டுமென்பது தான் அரசாங்கத்தின் நோக்கம் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI A. VEDARATHNAM : இப்படி பெரிய தொகை செலவழிப்பதற்கு நம்முடைய மாநிலத்தில் நிதி வசதி உண்டா ? இதற்கு மத்திய அரசாங்கத்தினுடைய உதவி ஏதாவது கிடைக்குமா ? அப்படியானால், எவ்வளவு கிடைக்கும் என்பதைத் தயவு செய்து அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : எவ்வளவு உதவி கிடைக்கும் என்பது பற்றி தகவல் என்னிடம் இல்லை. கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்ல முடியும்.

*Treasury Office (Panruti).*

* 934Q.—SRI S. THANGAVELU : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கடலூர் தாலுகா பண்ணுருட்டியில் கஜானா அலுவலகம் நிரந்தரமாக அமைத்தல் விஷயமாக அரசாங்கத்தினிடம் எதேனும் திட்டம் பரிசீலனையில் இருக்கிறதா ?

(இ) அப்படியானால், எப்போது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI S. THANGAVELU : கஜானாவை நிரந்தரமாக அமைக்க வேண்டுமென்று மாவட்ட கலெக்டர் மூலமாகவும், பொது மக்கள் சார்பிலும், மண்டல காங்கிரஸ் கமிட்டி சார்பிலும் விண்ணப்பங்கள் அரசாங்கத்துக்கு வந்திருக்கின்றன. மீண்டும் அதைப் பரிசீலனை செய்து கஜானா அலுவலகத்தை நிரந்தரமாக்குவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது அங்கே கலெக்‌ஷன் டெப்போ மாதிரி ஒன்று இருக்கிறது. அது ரெகுலர் கஜானா அல்ல. ரெகுலர் ஸப் டிரெஷரியாக இருக்க வேண்டுமென்று சொன்னால்,